# 14

# எரித்தும் புதைத்தும்

கடைசியாக அவன் கையில் கொடுக்கப்பட்ட விஸிட்டிங் கார்டை உற்றுப்பார்த் தான் லயனல்.

வெளேரென்று வெட்ட வெளியாக இருந்தது அந்த வெள்ளைகார்டு, மணியை அடித்தான். ப்யூன் ராஜா் வந்து நின்றான். விசிட்டிங்கார்டை அவனி டம் நீட்டினான் லயனல். பவ்யமாய் தலைகுவிந்தபடி ப்யூன் ராஜர் கேட்டான் ''ஏன் ஸார் நேரமாய்டுச்சா இந்த ஆளை நாளைக்கு வரச் சொல்லிடட்டுமா?''

''விஸிட்டிங் கார்ட்ல என்னடா இருக்கு?''

''இருக்குங்களே என்னமோ எஸ் ஏ ஏவியு ன்னு போட்ருக்கே என்ன சாவ இது? ஏங்கிட்ட குடுக்குறிங்களே போயி!''

Saavu சாவு, சாவா? அப்படி ஒரு பேரா? கீழ என்ன என்ன போட்டு ருக்கு? அதையும் இப்படியே படியேன்!''

''கீழ நிறைய போட்ருக்கு ஸார் நீங்களே படிங்க நான் படிக்கத் தெரியாத வன்! வேணும்ன்னா லக்ஷ்மி இன்னும் கீழதான் இருக்காங்க பெறப்படலை போயி அனுப்புறேன் சார்!''

''இந்த ஆள் எப்படி இருக்கான்?''

''நல்ல வாட்ட சாட்டமா இருக்காரு ஸார்! நாலு மணிக்கே வந்துட்டாரு! சரி நீ போயி லக்ஷ்மியை மட்டும்.... மத்த டைப்பிஸ் யாரும் கூட வராமல்.... தனியா வரச் சொல்லிட்டு நீ போ! கீழ டெஸ்பாட்சிங்ல ஐயர் இருந்தா நான் கீழ வந்தப்புறம் போகலாம்ன்னு செல்வீட்டு நீ போகலாம் வீட்டுக்கு. வாட்ச்மேன் நாதமுனிகிட்டை இன்பர்மேசன் குடுத்துடு இன்னைக்கு நீ சீக்கி ரம் போறேன்னு!''

''அந்த மனுஷன் சாவு?''

''மறந்தே போச்சு! லக்ஷ்மி கிட்ட செல்லி அவமேல வரும் போது உள்ள வரச் சொல்லிடு''

ராஜர் கீழே போய் விட்டான். விஸிட்டிங்கார்டை மறுபடியும் பார்த்தான் லயனல். அது வெள்ளையாக இருந்தது. சுத்தமான வெள்ளை சுற்றிலும் பார்த் தான் சுகமான லைட் அரக்கு கலரில் டிஸ்டம்பர் பூசிய அருமையான ஆபீஸ் ரூம் ஏர்கண்டிசன் மிருதுவாய் சத்தமிட்டுக் கொண்டிருக்கிறது. மேலே ஓடாத விசிறி நாலு புறமும் ஜன்னல் கண்ணாடி வழியே வெளியே தெரியும் ஆகாயம், கட்டிடத்தின் மேல் தளங்கள் உச்சிகள், அவைகளில் ஒரு கோவில் கோபுரமும் தெரிகிறது.

மணி ஒலித்தது....'மே ஐ கம் இன் பாஸ்?' -லக்ஷ்மி கேட்டுக் கொண்டே உள்ளே வந்தாள். லயனல் கண்கள் ததும்பின. லக்ஷ்மி ஒரு அநுபோக பொருள்.சொல்லப் போனால் அவன் விலை தந்து முடிந்து வைத்திருக்கும் ஒரு அழகியல் சாதனம். அவனுடைய விலை உயர்ந்த கார்! ஜப்பானிலிருந்து வந்த அபூர்வ கேமரா! அமெரிக்காவிலிருந்து வந்த அவனது நவீன ஸீட்கோட்!.... ஆபிஸில் எல்லாருடைய நம்பிக்கையும் இதுவே! ஆனால் லக்ஷ்மி ஒரு சாத னம் மட்டுமல்ல மிக தைரியமான துணை.

''ப்ளீஸ் ஷீதிஸ் விசிட்டிங்கார்ட்...வேர்ஸ் ஹீ?''

''ஆமா ராஜர் சொன்னான், வெளியே யாரையும் காணுமே ஸார்'' 'வாட்? யாரையும் காணுமா? - லயனல் வியர்வை பொங்குவதை உணர்ந்தான். ஒரு வேளை லேட்டாச்சுன்னு போய்ட்டிருப்பாரோ? லெக்ஷ்மி கார்டை பார்த்துப் படித்தால் பி.சுப்ரமணியன்,

ஏஜெண்ட், ஜாக்ஸன் அண் ஜாக்ஸன் கம்பனி

பங்கு மார்க்கட் வீதி, தைனியப்பன் வீதி,

மெட்றாஸ்.

''ஹூ இஸ் திஸ் பி சுப்ரமணியன் பாஸ்ட்டர்ட்? ராஜர் என்னமோ? ஔறி கொட்டினான். நீ பி. சுப்ரமணியன்ங்கறே?''

''ரொம்ப சூடா இருக்கேள் போல இருக்கே? ம் ஹீம் இருங்க'' ஃப்ரிட்ஜ் ஜத் திறக்கப் போனாள் லக்ஷ்மி. அவள் பின்னால் நின்றது ஃப்ரிட்ஜ்! லயனல் எழுந்து ஜன்னல் ஓரமாய் போய் நின்றான். கீழே மௌண்ட் ரோட்டில் இருட் டுக்கான கவி பாட ஆரம்பித்தது ஒரு பக்கமாய் வானத்தில் ஒதுங்கிக் கொண் டிருக்கும் வெளிச்சத்தால் தெரிந்தது. இருட்டு ஒரு கவிதை!

ஒரு கப் நிறைய ஜில்லென்ற பீர் நுரையுடன் எதிரே அவள். லக்ஷ்மி விபூதி அணிந்திருந்தாள். சந்தன நிறம் இரத்த நிறத்தில் ஜாக்கட்; மிக மிக ஆழமாக வெட்டப்பட்ட கழுத்தை ஆங்காங்கே வட்டம் வட்டமாய் துளையிட்டுத் தைத்த 'அப்ளிக்' முறை இலைக் கொடிகள் அதில்! வெள்ளி இலைகள் பூக்கள் கழுத் தில் ஒரு வட்ட கம்பி மட்டும் தங்கம் சரியான வட்டம். வேறு எதுவும் இல்லா மலேயே ஒரு வெட்டு மின்னியது டாலர் இல்லை.

அலுப்பே இல்லாமல் லயனல் பார்த்துக் கொண்டே இருந்தான் அவளை. அவள் புருவங்கள் அவனுக்கு மிகவும் பிடிக்கும் பிறை வால் இமைகள்! பளிச் சென்ற வெள்ளை கருப்பு விழிகள் பெரியவை; யாருடன் நின்றாலும் தனித்து எடுத்துப் பேசுகின்ற விழிகள்! கூர்மை! கூர்மை!சுருக்! மை!

கையில் பீருடனேயே அவளை நுகர்ந்து முத்தமிட்டான் லயனல். வழக்கம் போல அவனுக்கு வெறி தருகின்ற அந்த துடைக் கிள்ளும் திமிறி அவன் கிஸ் ஸீக்கு 'ஒதுங்கி' க் காட்டுகின்ற போலியான 'யு நாட்டி' யும் அவளிடமிருந்து கிடைக்கவில்லை. பீரை உறிஞ்சாமல் மேஜையில் வைத்தான்.

கதவு தட்டுகின்ற ஓசை! மே ஐ கமன் ஐயர்!

'கம் இன்' - என்றாள் லக்ஷ்மி. வந்தது ஐயர். முப்பது வருட ஸர்வீஸ் லக்ஷ்மிக்கும் அவருக்கும் ஆகாது. ஐயர் வைதீகம். லக்ஷ்மியை திருத்தமுடியாது என்பவர். லயனல் மீது நிறையப்பிரியம் சம்பளம் மட்டும் அல்ல அவர் வேலை பார்ப்பதற்குக் காரணம்!

''பாஸ் எங்கேடி?''

''ஸ் ....'டி ங்காதேங்கோ! அதோ அங்க ஜன்னலண்ட நிக்கறார் பாருங்கோ.''

''தீர்தம் ரொம்ப நேரமா ஊத்திக்கறா? தெளிவு இருக்குமா?''

''ஸ்டுப்பிட்.....! போய் பேசுங்கோ!''

''ஆமடி! நீயெல்லாம் ஸ்டுப்பிட் சொல்ற அளவுக்கு வெச்சுருக்கான் லய னல்! ...குட் ஈவ்நிங் ஸார்....கீழ சுப்ரமணியன்னு ஒருத்தர் காத்துண்டு இருக்கார். ஜாக்ஸன் கப்பனிலருந்து வந்து ரொம்ப நேரமாச்சாம். மேல வந்தாராம். நீங்க ஆம்பட்லியாம்...இருக்கார். வரச்சொல்லட்டுமா. இல்லே நாளைக்கி வாடான்னு அனுப்பிச்சுடவா. டயம் வேற ஆறே முக்காலறது....நீங்க போணும்ன்னா போங்கோ.''

''வந்து....சுப்ரமணியன்னு ஆளு புதுசா இருக்கு.''

பின்னாலிருந்து லக்ஷ்மி சொன்னாள் ''கீழ இருக்கட்டும். பாஸ் கீழ வரு வார் பாப்பார். இருக்கச் சொல்லுங்கோ!'' ஐயர் லயனல் முகத்தை பார்த்தார். ''ம்! கீழ இருக்கச் சொல்லுங்க'' என்று தலையாட்டினான் லயனல். பீரை எடுத்து உறிஞ்சினான்.

ஐயர் அமைதியாக போகப் புறப்பட்ட போது மெதுவாக லக்ஷ்மியிடம் ''டீ பொண்ணே சீக்கிரமா கீழ வாங்கோ. ஆத்துக்குப் போயி தொலைக்கணும்'' என்ற படியே கதவை இழுத்து விட்டு வெளியே போக அவர் போய் சில செ கண்டுகள் வரை கதவு மெதுவாக இடைவெளியை குறைத்துக் கொண்டே வந்து கடைசியில் 'பஸ்' என்ற ஸ்பிரிங் ஓசையுடன் அழுத்த மூடிக்கொண்டு வெளி உலகத்தை துண்டு பண்ணி சேர்த்து அறைக்குள் அழுத்தியது.

மறுபடியும் இறுகத்தழுவி நெருடி அவளை முகத்திலேயே கோபித்துக் காட்டி மறுகையால் விலக்கி தடுமாற வைத்தான் லயனல்.

தடுமாறி நிலைக்கு வந்தாள் லக்ஷ்மி. கொஞ்சம் களைத்து விட்டாள்.அவ னையே உற்றுப்பார்த்தாள் சாதாரணமாய் நின்றாள். கண நேரம்.

'கெட் அவ்ட்' - லயனல் கத்தினான் குபீரென்று. அவன் ரத்தம் சூடேறி மண் டையில் குவிந்து பாய்ந்தது. அவள் அசையவில்லை. அவள் அவன் நிலையை தடுமாற்றமில்லாமல் கவனித்தாள். அவனுக்கு இறைத்தது. அவளை விடக் கூடாது. பீரை உறிஞ்சினான்.

''என்ன ஆச்சு உங்களுக்கு? ஹூம் பீர் தானே! தாங்குமே! என்ன ஆச்சு?''

''இந்த பத்தினித்தனமெல்லாம் வேணாம் ஆமா!''

''நான் பத்தினின்னு ஓங்ககிட்ட சொல்லிண்டா ஓங்க ஆபிஸ்ல சேர்ந் தேன்?''

''ஏய்! பேசாதே!'' உறுமினான்.

''சரி வாங்க போகலாம் கீழ அந்த சுப்ரமணியன் வேற!''

''ஏமாத்திட்டு போலான்னு பாக்குறியா?''

''புரியல்லியே! என்ன ஏமாத்தறது! நானா? ஏன் ஏமாத்தணும்? உங்க மூட் சரியில்லை! வாங்க என் ராஜா கண்ணுல்ல....''

''ஒன் ஊட்டு கொஞ்சல்லாம் வேணாம். இ...ங்கே வா...''

அடுத்தகணம் லக்ஷ்மி, லயனலுக்குள் - இம்முறை ரத்தம் புள்ளியிட்டது. இந்த தடவையும் பெரிய ஏமாற்றம். 'கிக்' இல்லாத கிஸ்! அவனுக்கு லக்ஷ்மியும் அலுத்துப் போகிற நேரங்கள். அவள் இந்த ஆபீஸில் சேர்ந்த மறு மாதமே லக்ஷ்மியை விரட்டியடித்து விடுவான் என்று கூட ஸ்டென்னோ குட்டிகள் பேசிக்கொண்டன ரகசியமாய். மற்ற ஸ்டெனோக்களை அஞ்சு பேர் இருந்தும் கூப்பிடுவதில்லை அவன்! போகப் பொருளாய் பெண்ணை வெற்றிகரமாய் உபயோகிக்க எவனாலும் எப்போதும் முடியாது என்பான் - உபயோகிக்க என்னாலும்....'நோ' என்பான். ஆபீஸில் அசிங்கம்! என்பான். காதலாவது சுத்தரிக்காயாவது என்பான். பெண் உறவு எல்லாமே அந்த நேரத்தோடு பைசலாக உடனே ஓடி வந்து விடுவதே அவன் வழக்கம். மனைவியும் தேவடியாளும் ரெண்டுமே ஒரு சாயல் கொண்ட ரெண்டு சதானங்கள்தான்! வேறு வேறு!

மெட்ராஸிலும் பாம்பேலும் பெரிய அளவில் வியாபாரவிஸ்தர்கள் கொண்ட பெரிய கம்பெனியின் மிக இளம் டயரக்டர்களில் ஒருவன் லயனல். ஒரு மனைவி- ரெண்டு குழந்தைகள் - பெரிய பங்களா. ஆஸ்தி பூஸ்தி - நாலு ரஷ்யன் நாய்கள் - பல்வேறு கம்பெனிகளில் பங்குகள் - பெயருடன் நாலைந்து எழுத்துக்கள் டிகிரிகள், கௌரவங்கள்.

லக்ஷ்மிதான் அவனை முளை அடித்துக்கட்டிய ஒரே ஒரு ஸ்டெனோ. மிகவும் தைர்யம் லயனலின் ஆட்டத்துக்கும் மூர்க்கத்துக்கும் அடி உதைகளுக்கும் சரியாக தாக்குப்பிடிக்கிற மெலிந்த நுண்மையான பலவீனமான ப்ராம்மணப் பெண். ஒரு சாதாரண இன்டர்வ்யூவில் வெளி வராண்டாவில் சந்திப்பு. துல்லியமான வெள்ளை பட்டுப்புடவை. புருவ இனைப்பில் சிறு திரு நீற்றுக்கோடு குங்குமம் கிடையாது. பளிச்சென்ற பதில். உடன் செயல் அழைக்கும் திறமை. இவ்வளவும் உடனே புரிகின்ற தோற்றம் அவளுடையது. அவனைக் கண்டு மரியாதை தோன்றும் ஆபீஸ் சூழலை உடைத்து அவளது பலவீனமான ஜாதிய பத்தி மற்றும் நம்பிக்கைகளை நசுக்க மூலப் பெண்ணை வெளியில் கொண்டு வந்தது. அவளுடைய வறுமையும் பசியும் குடும்பமும்.

லயனல் அவளை அப்போதே தன் ஆபீஸீக்கு அப்பாயின்மெண்ட் கொடுத்ததும் ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனாள் லக்ஷ்மி. லயனல் நல்ல உயரம். கருப்பு நிறம் தாட்டியான ஆனால் தோற்றத்தில் கட்டு விடாத வயசுக்கும் மீறிய இளமையும் வயசுக்கு ஒவ்வாத முரட்டுத்தனமும் தெரியும். பெண்கள் விரும்புகின்ற மென்மை தோற்றம் மென்மையற்ற பழக்கம் இரண்டும் இல்லை அவனிடம். லேசில் பெண்கள் தேவைப்படுவதும் இல்லை அவனுக்கு.

இன்டர்காம் ஜிர்ரிட்டது. ஐயர் பேசினார். லக்ஷ்மி பேசினால் லயனலுக்காக. இருவரும் சோபாவில் இருந்தனர். பேசி வந்த பின்-

''ஐயர் நேரமாச்சுங்கறார் போகலாமா வீட்டுக்கு?''

''உங்க ஊட்டுக்கு நானும் வரவா?''

''எதுக்கு?''- மறுபடியும் மறுபடியும் அவன் முளைத்து முளைத்தான்.

''இதுக்குத்தான்!'' - ஜில்லென்று இருந்தாள்- பிணம் மாதிரி!!!

இன்டர்காம் அலறியது. அவள் எழுந்து போகமுடியாத அளவு அவன் அவளை ஆக்ரமித்து சூழ்ந்திருந்தான். அவனே எழுந்து போய் பேசினான்.- உதடுகளில் காக்ஸ்டன் புகைந்தது.

''எஸ்''

''அந்த ஆளை வரச் சொல்லு - நீங்க கீழ வரேன்னேளே? மணி ஏழரையாச்சே!''

லயன்ல ஸ்விட்சை ஆப் செய்து குரலை கட் செய்தான்.

போதும்! கொஞ்ச நேரம் லக்ஷ்மி எழுந்து கோடியில் பாத்ரூம் போனாள். கதவு தட்டப்பட்டது.

ஐயர் மட்டும் வந்து ஒரு விசிட்டிங்கார்டை கொடுத்து விட்டு சிரித்தபடி ''வரச்சொல்லவா? வெளியே இருக்கார்'' என்றார்.

''வரச்சொல்லுங்கோ'' என்று சொல்லியபடி குனிந்து விஸிட்டிங்கார்டைப் பார்த்தான் லயனல்.

அது வெள்ளை வெளேரென்று எழுத்தே இல்லாமல் வெறும் கார்டாக பூரணமாக வெறும் சதுர அட்டையாக காலியாக இருந்தது.

''ஐயம் சுப்ரமண்யன் ப்ரம் ஜாக்ஸன்ஸ்!''

''எஸ் ஐயம் லயனஸ்! உங்களுக்கு நான் என்ன செய்யணும்.''

''ஐவாண்ட லக்ஷ்மி! கன் யூ?'' - என்றான் சுப்ரமணியன். மின்னல் வெட்டியது போல இருந்தது. நெடிய உருவம்.

வலுவான மனிதன்! ''வாட் டு யூ மீன்?''

''ஆமா! அய்வாண்ட் லக்ஷ்மி ல்லே...ஒன்னை கொன்னுடுவேன். அப்படியே கழுத்தைப் பிடிச்சு நெக்கி மிதிச்சு. துவைச்சு....'' ஹிஸ்ட்டீரிக்காக சுப்ரமணியன் சிரித்தான்.

யார் இவன்? ஓ! இவன்தான் அந்தப் பயலா? எப்போ பார்த்தாலும் தன்னையே சுத்திக்கிட்டு கலாட்டா பண்ணிக் கிட்டிருக்கதா லக்ஷ்மி சொல்வாளே அந்த ரோமியோ இவன் தானா? அவனேதான்!

''மிஸ்டர் இது ஆபீஸ்! பிஹேவ் யுவர் ஸெல்ப்ஃ!'' -என்றான் லயனல்.

''அய்! ஏமாத்தலாம்னு நினைக்காதே! போனை எடுக்காதே ரூம்ல உன் ஆபீஸாண்ட நுழையும் போதே வெளியிலேயே இண்டர்காம் வயரை கட் பண்ணிட்டேன். இது மூன்றாவது மாடி! கீழ வாட்ச்மேன் நாதமுனி வர இன்னும்

ரண்டு மணி நேரம் ஆகும். ப்யூன் ராஜர் அவ்ட்! ஐயர் இன்னும் இருக்கார். மேலவர மாட்டார். நீயும் நானும் தான். ஏதாவது எக்குத்தப்பா பண்ணலாம்னு பாத்தே சொருகி எடுத்துடுவேன் சொருகி ஜாக்கிரதை!''

ஒன்றரை அடி நீளத்தில் அவன் கையில் பளபளவென மின்னிய அந்த இம்போர்ட்ட பர்ஷன் கத்தி குரூரமாய் வளைந்து நுனியில் அகன்று கூராகி யிருந்தது. எந்த அசைவிலும் செருகப்படும் பயங்கரம்.

''நான் என்ன செய்யனும்னா கேக்கற?''

''லக்ஷ்மியெ உட்டுடு! லக்ஷ்மியை உட்டுடு! உட்டுடு!''

பதறினான் அவன். கத்தி சரியாய் கழுத்தை நோக்கியிருந்தது. லயனல் பாத் ரூம் கதவை ஒரு முறை பார்த்தான் எந்த நிமிடமும்...

''மிஸ்டர் சுப்ரமணியம் ஐயம் நாட் லவிஸ் மிஸ் லக்ஷ்மி யுநோ! நீங்க அவளை அப்ரோச் பண்றதுக்கு நான் என்ன செய்யணும்? இதென்ன பயமுறுத்தல்?''

''அய்! யாருகிட்ட கதை விடறே? காலேஜ்ல படிச்ச காலத்லருந்து அவளெச் சுத்திகிட்டு இருக்கறவன் நான்! ஐநோ ஐயம் யூஸ்லெஸ்! ஆனா நீ அவளெ கசக் கிப் பிழிஞ்சு எடுத்துக் கிட்டு இருக்கிற அயோக்கியன்.''

''அவ பூ மாதிரி! கல்யாணம் பண்ணிக்குங்கன்னு கேட்டாளாமே! வைப் பாட்டியா வெச்சுக்குங்கன்னு சொன்னாளாமே! நான் அவெளச் சுத்திச் சுத்தி ஓஞ் சாச்சு கடைசியா என்னெ கல்யாணம் பண்ணிக்கன்னு கேட்டப்ப அவ அழுதா! ஒரு ஸ்டெனோ வாத்தான் நீ இருக்கணும்ன்னு சொன்னியாமேடா! இதோ பார் கல்யாணமும் பண்ணிக்க மாட்டே காண்குபைனாவும் வெச்சுக்க மாட்டே லவ் வும் வேண்டாம் ஜஸ்ட் ஒன் க்ளாஸ் அப் பீர்தான் அவளை இல்லையா? ஐடோண்ட் அலவ் யுடு லிவ்! இன்னைக்கு நீ சாகப்போறே! லக்ஷ்மி! இதோ இன் னியோட உன்னெப் பிடிச்ச பீடை ஒழிஞ்சான். ஒழிஞ்சான்....''

கீச்சுக்குரலாய் ஹிஸ்ட்டிரிக்கான அவன் பேச்சில் அசந்து அதை விட்டு வில காமல் நின்றான் லயனல்! உண்மைதான் வந்திருப்பவன் மிக அபாயகரமான வன். எதையும் செய்யத் தயங்காதவன். தீவிர மனோ நிலையில் இருக்கும் வெறியே அவன் ஆனாலும் அமைதியாய்ப் பேசினான்.

''மிஸ்டர் சுப்ரமணியம் அவசரப்படாதீங்க. நான் சொல்றதைக் கேளுங்க எனக்கு என் நம்பிக்கை இன்னும் வீண்போகலை'' பாத்ரூமை பார்த்துக் கொண்டே கவனமில்லாமல் நகர்ந்தான் லயனல் - அவ்வளவுதான் 'விஷ்!' மின் னல் குறுக்கில் வீசயது. 'ஏய்!' லயனல் கத்தினான். தோள்பட்டையில் ஆரம் பித்து புஜத்தில் முடிகிற மாதிரி ஒரு கோடு - சற்று நேரத்தில் மாங்காய் பிளந்த இடத்தில் நனைந்து பரவியது புது ரத்தம். ''ஆ!'' கையைப் பிடித்துக் கொண்டு சோபாவில் விழுந்தான் லயனல்.

''இது ஸாம்ப்பிள்தான்! ஏதாவது செய்தே நேரே உடனே மேல போக சொரு கிடுவேன் - லக்ஷ்மியெ உட்டுடு!''

''ஏய்! என்ன முட்டாள்தனமா பேசுறே நீ! அவளெ நீ என்ன வேணும்னா லும் செஞ்சுக்கோ- நான் என்ன பண்ண- நான் யார் இதுல!''

— —

''ஏங்கிட்ட அவ எல்லாம் சொல்லியாச்சு இன்னும் நீ அலட்டிக்கிறே பாரு அதான் பரிதாபமா இருக்கு - பூமாதிரி இருந்தவளெ இழுத்து கிட்டுப்போயி மூணு அபார்ஷன் பண்ணி கொஞ்சம் கொஞ்சமா கொண்ணு எடுத்துட்டு இப்ப என்ன வேணும்னாலும் பண்ணுன்னா!! ஏய் உன்னெ எனக்கு நல்லாத் தெரியுண்டா லக்ஷ்மியெ இழுத்துகிட்டு எத்தனை சினிமா எத்தனை ரெஸ்டாரண்ட் எத்தனை டாக்ஸி. எத்தனை தடவை ஹோட்டல் ரூம். எத்தனை தடவை இங்கே ஆபீஸ்ல! பின்னாலேயே தாண்டா இருந்தேன். சும்மாத்தான் அவளுக்கு இடைஞ்சல் இல்லாம இருக்கணுமே. அவ சுகம்தான் எனக்கு வேண்டியது. இப்ப அவ எங்க இருக்கா தெரியுமாடா இட்டியட்! டேஞ்சர் லிஸ்ட்ல!''

லயனல் பாத்ரூமைப் பார்த்தான். கதவின் கீழ் இடுக்கைப் பார்த்தான் ''ஒரு நாள் கேட்டேன் லக்ஷ்மி நீ அவனை கல்யாணம் பண்ணிகிட்டு நல்லாயிருக்கக் கூடாதான்னு. அவ சொன்னா டேய் சுப்ரமணி அவருக்கு பிரியம் இருந்தாத் தான் பண்ணிப்பேன் - பின்னே அவனோட ஏன் இப்படி எழயணும்? விட்டுத் தொலையேன்னதுக்கு அவர் கல்யாணம் வேண்டாம்னா ஓ! நான் உட்டுடுணுமா? நான் அவரெ உட்டு போறதான இனிமே உயிரோட முடியாது! பட் அயம் நாட் கோயிங்கு சூயிஸைட்! அப்டீனா லயனல் உங்களுக்கு என்ன குறைச்சல்? அவனை நீங்க மாரி பண்ணிண்டா என்ன? அப்டின்னு நான் கேக்கலை. ஏன்னா அவளை நீ லவ் பண்ணலை. என்னையும் பண்ண உடலை - உன்னை நானும் விடப் போறதில்லை-''

பையிலிருந்து ஒரு டாக்யுமெண்ட் கத்தையை உருவினான் அவன். ''இது உன் சொத்தில் முக்கால் பாகம் எல்லாம் சுத்தமவா வக்கிலெல்லாம் கன்ஸல்ட் பண்ணி எழுதியிருக்கு. கால் பங்கு சொத்து உன் மனைவிக்கும் குழந்தைகளுக்கும். மீதி லக்ஷ்மிக்கு! கையெழுத்து எல்லாத்தையும் வரிசையாப் போட்டு குடுத்துடு. லக்ஷ்மியெ இனிமேல் விட்டுடு!''

லயனலுக்கு இன்னும் அவன் கேட்பது பூராவும் புரியவில்லை. ஆனாலும் ஆபத்தின் விளிம்பில் இருப்பது புரிந்தது. பாத்ரூம் கதவு மூடியே இருந்தது. தோள் பட்டை எரிந்தது. ரத்தம் வடிவது நிற்கவில்லை. எதிரே ஸ்டாம்ட் பேப்பர கத்தை கையெழுத்துகளுக்காக காத்துக் கிடந்தன.

வாழ்நாளிலேயே இவ்வளவு முட்டாள்தனம் செய்ததேயில்லை.

''ம்! கையெழுத்து போடு! இல்லே கைரெண்டும் அடுத்த வீச்சு!'' உருமினான் அவன் வெறி கொலை வெறி. நிச்சயம் வீசுவான்!

லக்ஷ்மிக்கும் லயனலுக்கும் உள்ள உறவும் முறயும்தான் என்ன? ஒரு சுல்தான்! அவனுடைய அந்தப்புரம்! அதில் அவன் சாட்டை நுனியில் பஞ்சனையில் காலடியில் அவள்! அந்த அவள்தான் லக்ஷ்மி! மிதித்து துவைத்திருக்கிறான். சிரித்துக்கொண்டே இருந்திருக்கிறாள் அவள்! இப்போது என்ன செய்வது விலை! விலை கேட்கிறார்கள் இல்லையேல் உயிர் உயிர்!

முதல் கையெழுத்தைப் போட்டான் கைநடுங்கியது. அவனா வந்துவிட்டால்?... அடுத்த பக்கம் கீழே அடுத்த கையெழுத்து தொடர்ந்து. கையெழுத்துகளைப் போட்டான்.

க்ளாரா அவன் மனைவி. இரண்டு குழந்தைகள் ஜென்னி, நான்ஸி! அவனுக் குப் பின் அவர்கள் என்ன ஆவார்கள்? அவன் சொத்து கம்பனி ஆதிக்கம் ஆள் அம்பு எல்லாம் எல்லாம்.....' அவன் பிள்ளைகள் தெருவில்? எல்லாம் க்ளோஸ்!

லக்ஷ்மியிடம் புரண்டு கிடந்த எந்த வேளையிலாவது இது பற்றி யோசனை இருந்ததுண்டா? லக்ஷ்மியாவது கேட்டதுண்டா. அது கொடு அது வேணும் இது தான் வேணும் ஓ! நீ என்ன பெண் லக்ஷ்மி; ஒரு கணம் நெஞ்சில் ஏதோ பிளந் தது போலிருந்தது. வயிற்றுப்பாட்டுக்கும் சம்பளத்துக்கும் அவன் இழுத்த இழுப்புக்கு அவள் வந்து படிந்து போனது உண்மை. அதையும் மீறி ஏதோ! எதையும் பாராது எதற்கும் வணங்கி எதையும் ஏற்க அவள் தயாராய் சிரித்துக் கொண்டே இன்றுவரை இருக்க வேறு அவளுக்கு என்ன வேண்டும்?

கத்தி நுனியில் இந்த யேசனை லயனலை அயரவைத்தது. க்ளாரா அவன் மனைவி! ரொக்கம் அவ்வளவே அவள்! பணம்! பணக்காரி! ஒரு புருஷன்! வேண்டிய கௌரவம்! அது லயனல் 'நெஞ்சை வலிக்கிதா? ரொம்ப ட்ரிங்க்ஸ் வேணாங்க!' இப்படி ஒரு நாள் க்ளாரா கேட்டதுண்டா? கண்ணீர் கண்ட துண்டா? ஆனால் லக்ஷ்மி இதையே இப்படி கேட்பாள் படுக்கையில்தான் இதோ - 'ட்ரிங்க்ஸ் இப்ப ஓவர்! போதும் உங்க பெண்டாட்டி பிள்ளை என்னவாகும் யோசிக்கங்களா ஃபாஸ்ட் டியர்!'

க்ளாராவின் பார்வையின் வெறுமை - அணைப்பின் வெறுமை - அவள் வயிற்றில் அவன் தந்த பிள்ளைகளின் வெறுமை - பிள்ளைதள் வளர்ந்த வெறுமை - அப்பா என்று கூப்பிடாத வெறுமை - லயனல் அவர்களை அணைக்காத குழந்தைகளை கொஞ்சாத வெறுமை - எல்லாம் நினைவில் வந்து அவன் கையெழுத்துகளை உலுக்கின! இப்போதும் கத்தியை அவன் கழுத்தின் நேரே நீட்டியிருந்தான் சுப்ரமணியன். இவன் எவ்வளவு அதிருஷ்டசாலி அவளை அவளுக்காகவே காதலித்து அவளையே சுழன்று இதோ அவளுக் காவே..... சொத்துகளை லக்ஷ்மி கேட்கமாட்டாள்!! நிச்சயம்! ஆனால் இவன் தரு கிறான். கையெழுத்து லயனலை உறுதிப்படுத்துகிறது. ஆனாலும் அந்த வெள்ளை விஸிட்டிங் கார்டு இன்னும் ஞாபகத்தில்தான் இருக்கிறது! அது என்ன?

லக்ஷ்மி பாத்ரூமில் இருக்கிறாள். இவனுக்கு இன்னும் சில நிமிடங்களில் அது தெரியும். அதற்கு முன் இந்தக் கத்தி சொல்லி விட்டால்! கையெழுத்து முழுமையானதும் சுப்ரமண்யன் மறு கையால் டாக்யுமெண்ட் பேப்பர்களை கத் தையாய் உருவி எடுத்துக் கொண்டான்.

மேஜையில் இருந்த விஸிட்டிங் கார்டு சுப்ரமணியனுடையது. அதை மறு படியும் கையில் எடுத்தான் லயனல். இப்போதும் - அது வெறுமையாக வெள் ளையாய் இருந்தது.

சுப்ரமண்யனை அதில் தேடினான் லயனல்! அது காலியாய்த்தானிருந்தது.

பாத்ரூம் கதவு திறக்கவில்லை இன்னும் -

முன் கதவு தட்டப்பட்டது - வந்தது ஐயர்!

பக்கவாட்டில் கத்தியோடு லயனனோடு ஒட்டி ஐயருக்கு கத்தியை மறைத்து ஆனால் பின்புறம் இடுப்பில் கத்தியை ஊன்றி எச்சரிக்கையாய் நின்றான். சுப்ரமணியன் அவன் ஐயரையும் எதிர்பார்த்துத்தானிருந்தான்.

''டைம் ஆய்டுத்து ஸார்! வீட்டிலிருந்து உங்க காரெ அனுப்பிச்சிருக்கா''

''நீங்க போங்க வர்றேம்!''

''லக்ஷ்மியெ எங்க ஸார் காணும்? கீழயும் வல்லியே!''

''பாத்ரூம் போய்ருக்கா!''

''பாத்ரூமா? லக்ஷ்மியா?'' என்றான் சுப்ரமணியன்.

''உங்களுக்கு.....லக்ஷ்மியை முன்னாடியே.....தெரியு...மா'' என்றார் ஐயர். அதற்குள் மறுபடியும் லயனல் சொன்னான் படபடப்புடன் ''கீழ போங்க! லக்ஷ்மி வந்ததும் வந்திடுவோம் நீங்க போங்க!'' ஐயர் போனார் - கதவு மூடியது.

லக்ஷ்மி! என்று அழைத்தபடி பாத்ரூம் கதவைத் தட்டினான் லயனல். அவன் முதுகில் கத்தியை அழுத்தி ஊன்றியபடி ''யாரெ ஏமாத்தப் பாக்கறே! லக்ஷ்மி இங்கே இல்லை!'' என்றான் சுப்ரமணியன்.

''உனக்கெப்படித் தெரியும் அவ இங்கதான் இப்ப இருந்தா. இருக்கா''

''நிச்சயம் அவ இருக்கான்னு என்னை ஏமாத்தி தப்பலாம்ன்னு பாக்கறே நீ!'' 'நோ!' கத்தியபடியே பாத்ரூம் கதவை பலமாய் உதைத்தான். திறந்து கொண்டது. அங்கே யாரும் இல்லை. பாத்ரூம் காலி.

''யூ ப்ஃஃபூல்! அவ இங்கே இல்லைடா!''

''பின்னே?''

''ஜெனரல் ஹாஸ்பிட்டல் ஜைனக்ஸைடில யூட்ரஸ் ஆப்ரேஷன் ஆகி மூணு நாளா டேஞ்சர் லிஸ்ட்ல இருக்குடா அவபேரு!''

''ஆப்ரேஷன் லக்ஷ்மியா? அப்ப இங்கே இருந்தது யாரு?''

குப்பென்ற ஒடிக்கலான் நெடி எங்கும் பரவியது. லயனலின் நெற்றிப் பொட்டு வியர்த்து வடிந்தது. நெஞ்சு படபடத்தது.

நகர்ந்து மேஜையில் இருந்த ரிஜிஸ்டரை சுப்ரமணியன் முன்னால் திறந்து போட்டான். அட்டனஸ் ரிஜிஸ்டரில் லக்ஷ்மி காலை 8.57க்கு கையெழுத்துப் போட்டிருந்தாள். கத்தியை அவன் கழுத்தில் ஊன்றியபடி சுப்ரமணியனும் பார்த்தான் - பிறகு தொடர்ந்து ''இது அவ கையெழுத்துதான்!'' முணுமுணுத்தான்.

லயனல் காலின் கீழே பூமி உருவி எடுக்கப்படுவது போலிருந்தது. காலையில் லக்ஷ்மியுடன்! அந்த மூன்று முத்தங்கள்! சப்பென்று!

வெள்ளை விசிட்டிங் கார்டு! அதில் சுப்ரமணியன்!

கலகலவென்று சிரிப்பொலி. ஐயரும் லக்ஷ்மியும் சிரித்தபடி அறையின் கதவைத் திறந்து கொண்டு அதே நேரத்தில் உள்ளே நுழைந்தார்கள்.

''அடே! நீயா! எப்போ டிஸ்சார்ஜ் ஆனே லக்ஷ்மி!''

''இங்க ஏன் வந்தே?'' என்கிறாள் லக்ஷ்மி. உடனே ஐயரைப் பார்த்து ''மிஸ் டர் ஐயர்! இந்த லூஸ் பையனை கீழே கொண்டு போங்க சுப்ரமணீ கீழே போ!'' அந்தக்குரலில் மயிர் கூச்சிட்டது சுப்ரமணியனுக்கு. இன்று பூரணமாய் மூடாமல் நகர்ந்து கொண்டிருந்த அந்த ஸ்பிரிங் கதவு வழியே பாய்ந்தான் லயனல். ஆனால் அதற்கு முன்பாகவே கதவு ஐயரையும் சுப்ரமணியனையும் வெளியில் ஒரு கணத்தில் தள்ளி மிருக வேகத்துடன் அடைத்துக் கொண்டதும் கதவில் மோதி லயனல் கீழே விழுந்ததும் ஒரே நேரத்தில் ஓரத்தில் நிகழ்ந்தது.

அமைதி! கதவு இறுகியிருந்தது. எழுந்தான்! ஓடிகலான் மணந்தது. அந்த அறையில் அவர்கள் இருவர் மட்டும் லயனல் வியர்வைக்குளமானான். அவளை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. அவள் மட்டும் சிரித்தபடி அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள். திடீரென்று ஏர்கண்டிஷனர் தானாகவே நின்றது. ஓடாமல் நின்றிருந்த மின் விசிறி தானாகவே சுழன்றது.

லக்ஷ்மி மெதுவாக தீர்மானமாக நடந்து மேஜையில் இருந்த விஸிட்டிங் கார்டை எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் நீட்டினாள்.

லயனல் ஓடினான். கதவின் கைப்பிடியைத் திருகினான். மறுபடி மறுபடி மறு படியும்....கதவு இறுகியிருந்தது. லக்ஷ்மி அவனை நெருங்கி வந்தாள். பதறி ஓடி னான். அவனிடம் வந்து அமைதியாய் அந்த விஸிட்டிங் கார்டை நீட்டினாள். நடுக்கத்துடன் அதை கையில் வாங்கிக் கொண்டான் லயனல்!

சதுரமான அந்தக் கார்டில் இருந்த ஆறு ஆங்கில எழுத்துக்கள் முதலில் பார்த்த மாதரி துலாம்பாரமாய்த் தெரிந்தன.

Saavu சாவு! அந்தக் கார்டு முழுவதும் விரிந்து ஆறு எழுத்துகளும் அடைந்தன. லயனலின் நடு முதுகுத்தண்டு விறைத்துச் சிலிர்த்தது. லக்ஷ்மி சிரித் தாள். நடந்து அவன் அருகே நெருங்கினாள். இனிப் பின்னால் நகர முடியாது. ஃபிரிட்ஜ் இடித்து அவன் முதுகில் அழுத்த உடலோடு நெருக்கி அவனைத் தழுவி லயனலின் சிவந்த உதடுகளைத் தன் உதடுகளால் தாக்கி முத்தமிட்டு உறிஞ்சினாள்.

.....மின் விசிறி ஆடியாடிச் சுழன்றது. ஆவேசத்தோடு சுழன்றது.... தனியே யாரும் இல்லாத அந்த மூன்றாவது மாடியில் ஆபீஸ் அறையில் அந்த மேஜை ஓரமாய்......பிரிட்ஜின் முன் கிடந்த லயனலின் பிணத்தின் மேலே சுழன்று கொண்டிருந்த மின் விசிறி நிற்காமல் தொடர்ந்து சுழன்று கொண்டே இருந்தது. பின் ஒரு கணத்தில் நின்றது.

ஏர் கண்டிஷனர் மீண்டும் மிருதுவாய் இயங்கத் தொடங்கியது.

அதே நேரத்தில் - ஜெனரல் ஆஸ்பத்திரியில் வார்டு நம்.8 ல் ஒரு ப்ராம்ம ணக் குடும்பம் ஒரு படுக்கை அருகில் 'ஐயோ போய்ட்டாடி' எனப் புலம்பிக் கூச்சலிட வார்டர்கள் விலக்க நர்ஸ்கள் இங்கும் அங்குமாய் போய்வர ஆணை கள் தர ஸ்ட்ரச்சர் ஒன்றில் ஒரு பெண்ணின் பிணம் வெளியே கொண்டு வந்து போடப்பட்டது. பெரிய குடும்பம் நாலு தங்கைகள் ரெண்டு தம்பிகள் இன்னும்

குஞ்சு குளுவான்கள். வயதான அப்பா, பாட்டி.... பெண்கள் புலம்பியது ஓய வில்லை.

கேஸ் ஷீட்டை கழட்டிப் போன நர்ஸ் திரும்ப வராண்டாவுக்கு வந்து - ''லட்சுமி - பாடிய எடுத்துட்டுப் போறவங்க வந்து இதுல கையெழுத்துப் போடுங்க. ப்ராணனை வாங்காதீங்க! சீக்கரம்'' என்றாள்.

தலைவிரி கோலமாய் சுப்ரமண்யன் வந்தபோது லட்சுமி அங்கு இல்லை.

ஆஸ்பத்திரி லஸ்கர் ஒருத்தி சொன்னாள் -

''வீட்டுக்கு பாடியெ ராத்திரியே கொண்டுக்கினு போய்ட்டாங்களே. அவள் கள்ள ராத்திரியோட கொளுத்தி எரிச்சிருப்பாங்களே'' என்றாள் இன்னொருத்தி.

எல்லாமா எரிந்தும் புதைந்தும் போகும்?

(சுந்தரசுகன் - அக்டோபர், 93)

